# அத்துவைதம்

★ தொகுப்பு : ★

மௌலவீ KRM. ஸஹ்லான் றப்பானீ BBA. (Hons)

 www.facebook.com/sahlan.krm

 www.youtube.com/sahlankrm

வெளியீடு :

**SHUMS MEDIA UNIT**

Abdul Jawadh Alim Mawatha,
BJM. Building, Kattankudy-6
Tel : +94 65 22 48 968, +94 77 48 49 786

 - shumsmediaunit

 - shumsmedia

 - shumsnews

 - shumsmediaunit



என்னுரை

அஸ்ஸலாமு அலைக்கும் வறஹ்மதுல்லாஹி வபறகாதுஹுு

எல்லாப்புகழும் எல்லாம் வல்ல அல்லாஹ் தஆலாவுக்கே. புகழ்பவனும் புகழப்பட்டவனும் புகழும் அவனே. எதார்த்தமான உள்ளமை அவனே. “ஹக்’’ என்றும் “கல்க்’’ என்றும் பெயர் சொல்லப்படுபவன் அவனே. சகல சிருஷ்டிகளாகவும் தனது பரிபூரணத்தை கொண்டிருப்பவன் அவனே.

ஸலவாத்தும் ஸலாமும் அகிலத்தின் பேரொளி அண்ணல் முஹம்மத் ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும் அவர்களின் தோழர்கள் குடும்பத்தவர்கள் மீதும் தென்றலாய் வீசட்டும்.

இன்று உலகில் வாழும் தமிழ் பேசும் இஸ்லாமியர்களில் பெரும்பாலானோர் அத்துவைதம் என்ற சொல்லை இந்து மதத்தோடு மட்டும் தொடர்புபடுத்தி புரிந்து வைத்துள்ளனர். இதனால் இஸ்லாத்திற்கும் அத்துவைதம் என்ற சொல்லிற்கும் எந்த தொடர்புமில்லை என்று நம்பியுள்ளனர்.

அத்துவைதம் என்ற வட மொழிச் சொல் தமிழ்பேசும் இந்துக்களாலும் முஸ்லிம்களாலும் பல கருத்துகளை மையப்படுத்தி பாவிக்கப்படுவதையும் இஸ்லாமிய அடிப்படையில் அத்துவைதம் என்ற சொல் புரிந்து கொள்ளப்படவேண்டிய விதம் பற்றியும் இச்சிறு நூலில் விளக்க முயற்சிக்கிறேன்.

சொற்பயன்பாடு பற்றிய தெளிவின்மையால் அத்துவைதம் என்ற சொல் யாரால் பாவிக்கப்பட்டாலும் அது இஸ்லாத்திற்கு மாற்றமான நம்பிக்கையை குறிக்கும் சொல்தான் என படித்தவர்களும் பாமரர்களும் உலமாக்களும் நம்பியிருப்பதையும் பிரச்சாரம் செய்வதையும் காணமுடிகின்றது. இதன் விளைவாக இஸ்லாமிய அடிப்படையில் அல்லாஹ்வையும் றஸுலையும் ஈமான் கொண்ட உண்மை விசுவாசிகளைக்கூட முர்தத்துகள், இஸ்லாத்தை விட்டும் வெளியேறியவர்கள் என்று சித்தரிப்பதற்காக ‘அத்துவைதிகள்‘ என்ற சொல் சிலரால் தவறாக பயன்படுத்தப்படுகின்றது.



ஒரு உண்மை மு:்மினை இஸ்லாத்தை விட்டும் வெளியேறியவன் என பிழையாக தீர்ப்புச்செய்வதும் அதை நடை முறைப்படுத்துவதும் தீர்ப்புச் செய்தவனை இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றும் செயலும் அநீதியான செயலுமாகும்.

இந்த இழிநிலை மாறி உயர் நிலை ஓங்க இந்நூல் உதவும் என எதிர்பார்கின்றேன்.

நடு நிலையான சிந்தனையுடன் நூலை வாசித்து பயன் பெறுமாறு கேட்டுக்கொள்கின்றேன்.

அல்ஹம்துலில்லாஹ்

- நூலாசிரியர் -

## அத்துவைதம் – சொல் விளக்கம்

அத்துவைதம் என்பது வட மொழிச்சொல் இதனை 'அ' + 'துவைதம்' எனப்பிரிக்கலாம் 'அ' என்றால் அல்ல என்பது பொருள் 'துவைதம்' என்றால் இரண்டு அல்லது இருமை என்பது பொருள். எனவே அத்துவைதம் என்ற சொல்லுக்கு இரண்டல்ல என்பது பெருளாகும். இது ஒன்று அல்லது ஒருமையை குறிக்கின்றது. இச்சொல் 'அத்துவிதம்' என்றும் பாவிக்கப்படுகின்றது.

## இஸ்லாமியர்கள் அல்லாதவர்களிடம் துவைதம், அத்துவைதம் என்ற சொற்களின் பயன்பாடு

அத்துவைதம் என்ற சொல்லை இந்துமத வேதாந்திகளும் சைவ சித்தாந்திகளும் வெவ்வேறு பொருளில் பயன்படுத்தியுள்ளனர். அவற்றை தெளிவாக அறிந்திருந்தால்தான் இஸ்லாமிய அத்துவைதத்தை இந்துக்களின் அத்துவைதத்திலிருந்து வேறுபடுத்தி அறிந்து கொள்ளமுடியும்.

## ஆதிசங்கரரின் அத்துவைதம் அல்லது கேவலாத்துவைதம்

கி.பி 8ம் நூற்றாண்டில் இந்தியாவின் கேரளா மாநிலத்தின் காலடி என்ற இடத்தில் தோன்றிய ஆதிசங்கரர் அத்துவைதம் என்ற சொல்லைப் பயன்படுத்தி ஒரு கோட்பாட்டை நிறுவினார். இது கேவலாத்துவைதம் என்றும் அழைக்கப்படுகின்றது.

இவரது கொள்கைகள்

01. ஒரு பிரமப்பொருள் மட்டுமே உள்ளது அது குணம் அல்லது பண்புகளற்றது. அது நிர்குணப்பிரமம் எனப்படுகின்றது. (நிர்க்குணம் என்பது குணங்கள் அற்றது என்பதைக்குறிக்கின்றது)

02. என்றும் நிலைத்திருக்கும் பொருள் ஒன்றே ஒன்றுதான் அதுதான் 'ஸத்' என்றும் பரப்பிரமம் அல்லது பரமாத்மா என்றும் அழைக்கப்படுகின்றது. அதைத்தவிர எதுவும் மெய்ப்பொருள் அல்ல.



03. பரப்பிரமம் தனக்கு வெறாக ஒரு பொருளும் இன்றித் தானும் தனக்கு ஒரு குணமும் இன்றி நிர்விசேடமாய் இருக்கிறது. ( நிர்விசேடம் என்பது விசேட இயல்புகள் எதுவும் இல்லை என்பதைக்குறிக்கின்றது)

04. நாம் மனதால் நினைக்கக்கூடிய குணங்களுடன் சேர்ந்த கடவுள் என்ற பரம் பொருளை 'ஸகுணப்பிரமம்" என வேறாக நோக்கவேண்டும்.

05. அனைத்து உயிர்களுக்கும் உயிருக்குயிராகவும் அறிவுக்கறிவாகவும் இருக்கும் ஜீவாத்மாவும் வெறும் தோற்றமான அகில உலகிற்கும் அடிப்படை மெய்ப் பொருளான பரமாத்மாவும் இரண்டும் இரண்டல்ல ஒன்றே. ஜீவாத்மாவுக்குள் பரமாத்மா உள்ளது. பரமாத்மாவிற்குள் ஜீவாத்மா உள்ளது.

06. பிரம்மத்தின் கனவாக நினைவுத்தடமாக இந்த உலகம் உள்ளது ஆன்மா என்பது பிரமத்தின் அவதாரம் அல்லது துளியாக இருக்கின்றது.

என்பவை இவரது கொள்கைகளாகும். மாயாவாதம், ஏகான்மவாதம்,விவர்த்தவாதம் போன்ற கோட்பாடுகளின் அடிப்படையில் இவரது கொள்கைகள் காணப்பட்டன. இவரது கொள்கையை வேதாந்திரி மகரிஷி 'உணவு நம் உடலில் சத்தாக மாறிய நிலை' என உதாரணம் மூலம் விபரித்துள்ளார்.

## இராமனுஜரின் விசிட்டாத்துவைதம்

இந்தியாவின் தமிழ் நாட்டில் ஸ்ரீபெரும்புதூரில் கி.பி. 1017 ல் தோன்றிய வைணவ மகாச்சாரியாராகிய இராமனுஜர் அத்துவைதம் என்ற சொல்லைப் பயன்படுத்தி ஒரு கோட்பாட்டை நிறுவினார். இது விசிட்டாத்துவைதம் அல்லது விசிஷ்டாத்துவைதம் என்றும் அழைக்கப்படுகின்றது. விசிஷ்டம் என்றால் சிறப்பு என்பது பொருள் விசிஷ்டாத்துவைதம் என்றால் சிறப்பு நிலையான அத்துவைதம் என்பது பொருள்.

இவரது கொள்கைகள்

01. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒரே பொருளாலானவை. ஆனால் ஜீவாத்மா பரமாத்மாவிவிலிருந்து வெளிப்பட்டது. ஜீவாத்மா பரமாத்மாவின் ஒரு சிறிய பகுதி.

02. பிரமம் எனும் சத்து, சித்து எனும் ஆத்மாவுடனும் அசித்து எனப்படும் சடத்தோடும் எப்போதும் சேர்ந்திருக்கிறார்.

03. நாமும் பரமாத்மாவும் ஒன்றாகவும் வேறாகவும் இருக்கிறோம்.

என்பவை இவரது கொள்கைகளாகும். துவைதம், அத்துவைதம் என்ற இரண்டு கோட்பாடுகளையும் இணைத்தது விசிட்டாத்துவைதம் ஆகும். இவரது கொள்கையை வேதாந்திரி மகரிஷி 'வயிற்றுக்குள் உணவு' என உதாரணம் மூலம் விபரித்துள்ளார்.

## மத்துவரின் துவைதம்

இந்தியாவின் கர்நாடகா மாநிலத்தில் உடுப்பி பகுதியில் உள்ள பாஜக சேந்திரம் என்ற சிற்றூரில் கி.பி. 1238ம் ஆண்டு தோன்றிய மத்வர் என்ற மத்வாச்சாரியார் என்பவர் துவைதம் என்ற கோட்பாட்டை முன்வைத்தார். துவைதம் என்பதன் பொருள் 'இரண்டு' அல்லது 'இருமை' என்பதாகும்.

இவரது கொள்கைகள்

01. ஆன்மா கடவுளின் ஒரு அணுவளவு பகுதியாகும். இது 'ஸ்வகத பேதம்' என்று வடமொழியில் சொல்லப்படும். இது தன்னுள் இருக்கும் வேற்றுமையை குறிக்கின்றது.

உதாரணம் :- மரத்திற்கும் மரத்திலுள்ள இலைக்கும் இடையிலான வேற்றுமை

02. கடவுளுக்கும் உலகுக்கும் உள்ள வேற்றுமையானது இரு பகுப்புகளுக்குள் இருக்கும் வேற்றுமையாகும். இது 'விஜாதீய பேதம்' எனப்படும்.

உதாரணம் :- மரத்திற்கும் மலைக்கும் இடையிலான வேற்றுமை.

03. இறைவன் வேறு படைப்புகள் வேறு

என்பவை இவரது கொள்கைகளாகும் இவரது கொள்கையை வேதாந்திரி மகரிஷி 'நமக்கு முன் உணவு' என உதாரணம் மூலம் விபரித்துள்ளார்.



மேற்குறிப்பிடப்பட்ட கொள்கைகளைத் தவிர இந்துக்களில் இன்னும் பலர் அத்துவைதத்திற்கு பல விளக்கங்களை கூறியுள்ளனர். அவற்றில் சிலதை தருகின்றேன்

"உப்பும் நீரும் கலந்த கலவையில் பாத்திரத்திலுள்ள ஒவ்வொரு சொட்டு நீரிலும் உப்பு எப்படி கலந்துள்ளதோ அதுபோல் பரமாத்மா இருக்கிறார்."

- சாந்தேக்கிய உபநிஷத் -

"ஒரு சூரியன் பல குட நீர்களில் தோன்றுவது போலவும் ஓர் உருவம் பல கண்ணாடிகளில் தோன்றுவது போலவும் ஒரு பிரம்மமமே யாவற்றிலும் விளங்கி நிற்கின்றது."

- ஆறுமுக நாவலர் -

"பிரம்மம்தான உலகாக மாற்றிடைந்துள்ளது."

- பாதராஜனர் -

இங்கு நாம் கவனிக்கவேண்டிய விடயம் என்னவெனில் பொதுவாக இந்துக்கள் பேசும் அத்துவைதம் சேர்தல்,பிரிதல், இறங்குதல், கலத்தல், மாற்றமடைதல் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்த ஹுலூல், இத்திஹாத் எனப்படும் இரண்டு உள்ளமைகள் இருப்பதாகக்கூறும் ஷிர்க்கானதும் இறை பண்புகள் தொடர்பில் இஸ்லாமிய கருத்துக்களுக்கு மாற்றமான கருத்துக்களைக் கொண்ட குப்ரான கொள்கையாகும்.

இதை இந்துக்கள் அத்துவைதம் என்று சொன்னாலும் இது உண்மையில் அத்துவைதம் அல்ல துவைதம் தான்.

இந்துக்கள் தமது அத்துவைதக்கருத்துக்களை பரிணாம வாதம், சூனிய வாதம், பிரதி விம்பவாதம், அவச்சேதவாதம்,அறிவகவாதம், விவர்த்தவாதம், உருமயக்கவாதம் போன்ற கோட்பாடுகளின் அடிப்படையில் முன்வைக்கின்றனர். இந்தக்கோட்பாடுகளுக்கும் இஸ்லாத்திற்கும் எந்தத் தொடர்புமில்லை. முஸ்லிம்கள் அல்குர்ஆன் அல்ஹதீதின் கருத்துக்களினூடாக "தௌஹீத்" - "ஏகத்துவம்", "வஹ்தத்துல் வுஜூத்" - "மெய்ப்பொருள் ஒன்று" எனும் அடிப்படையில் அத்தஜல்லியாத் எனும் இறை வெளிப்பாடுகள் பற்றி விபரிக்கின்றனர்.

சில சந்தர்ப்பங்களில் இந்துக்களின் அத்துவைதக்கருத்துக்களும் இஸ்லாமிய அத்துவைதக்கருத்துக்களும் ஒரே கருத்தை மையப்படுத்துவது போன்ற தோற்றப்பாடுகளும் இருக்கின்றன. இது பற்றிய தெளிவான அறிவற்றவர்கள் இந்துக்களின் அத்துவைதத்தையே முஸ்லிம்களும் பேசுவதாகவும் நம்பியிருப்பதாகவும் தவறாக கருதுவதுடன் இஸ்லாமிய அத்துவைதத்தை இந்து மத ஞானம் என்று கூறி மறுக்கின்றனர். ஒரு இஸ்லாமிய தத்துவம் அல்லது கருத்து அல்லது நம்பிக்கை இன்னொரு மதத்தில் கூறப்படுகின்றது என்பதற்காக அந்த தத்துவம் மாற்றுமத தத்துவம், வேற்றுமத ஞானம் எனக்கூறி அதை மறுப்பது அறியாமை.

ரிக்,யசூர், சாம, அதர்வனம் போன்ற இந்து மத வேதங்களிலும் உப நிஷத்துகளிலும் இறைவன் ஒருவனே என்றும் அவனுக்கு நிகர் இல்லை என்றும் அவனையே வணங்க வேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. அவற்றில் சிலதை இங்கு தருகின்றேன்.

01. ஏகம் ஏவம் அத்விதயம்
அவன் ஒருவனே வேறு எவரும் இல்லை –
(சந்தேக்யோ உப நிஷத் - 6 : 2)

02. நா கஸ்ய கஸ்சிச் ஜனித நா கதிபத்
அவனுக்கு பெற்றோர்களும் இல்லை, பாதுகாவலரும் இல்லை
(ஸ்வதேஸ்வரா உபநிஷத் 6 : 9)

03. நா தஸ்தி பிரதிம அஸ்தி
அவனுக்கு நிகராக எதுவுமில்லை
(ஸ்வதேஸ்வரா உபநிஷத் 4 : 19)

04. அன்தாதம ப்ரவிஸன்தி ஏ அசம்பூதி முபாசதே
எவர்கள் இயற்கை வஸ்துக்களை வணங்குகின்றார்களோ அவர்கள் இருளில் பிரவேசிக்கிறார்கள். இன்னும் எவர்கள் மனிதனால் படைக்கப்பட்ட பொருட்களை வணங்குகிறார்களோ அவர்ககளும் இருளில் ஆழமாக மூழ்குகிறார்கள்
(யசூர் வேதம் 40 : 09)

05. தேவ் மஹா ஓசி
நிச்சயமாக கடவுள் மிகப்பெரியவன் ஆவான்
(அதர்வண வேதம் 20:58:3)



06. மா சிதன்யதிவி கன்சதா
நண்பர்களே! தெய்வீக தன்மை வாய்ந்த அவனையல்லாது வேறு எவரையும் வணங்காதீர்கள் அவனை மட்டும் வணங்குங்கள் -
(ரிக்வேதம் 8:1:1)

07. ஏகம் பிரஹ்ம் தவித்ய நாஸ்தே கின்ஜன்
இறைவன் ஒருவனே வேறு இறைவன் இல்லை. இல்லவே இல்லை.
(இந்து மத பிரம்ம சூத்திரம்)

மேலே குறிப்பிடப்பட்டுள்ளதன்படி இறைவன் ஒருவனே, அவனே மிகப்பெரியவன், அவனுக்கு நிகராக எதுவுமில்லை, அவனையல்லாது வேறு எவரையும் வணங்காதீர்கள் போன்ற தத்துவங்கள் இந்து மத நூல்களில் கூறப்பட்டுள்ளன. இதே தத்துவங்கள் இஸ்லாமிய புனித வேதமான அல்குர்ஆனிலும் கூறப்பட்டுள்ளன.

இவ்விரண்டு மதங்களிலும் மேற்கூறப்பட்ட ஒரே தத்துவங்கள் கூறப்பட்டதற்காக இஸ்லாமிய தத்துவங்களை இந்து மத ஞானம் என வாதிடுவதும் வேற்று மதங்களின் தாக்கம் என கூறுவதும் பொருத்தமானதல்ல. அவ்வாறுதான் அத்துவைதம் என்றாலே அது இந்து மத ஞானம் தான் என்ற பிடிவாதமுமாகும்.

இஸ்லாம் கூறும் அத்துவைதம் வேறு இந்து மதத்தில் பேசப்படும் அத்துவைதம் வேறு. இரண்டுக்குமிடையிலான வேறுபாடுகளை அறியாதவர்கள் இஸ்லாமிய அத்துவைதம் பேசப்படும் போது அது இந்து மத அத்துவைதம் என்று நினைத்து அதை மறுக்கின்றனர். பொதுவாக இந்துக்களின் அத்துவைதம் பிரிதல், சேர்தல், இறங்குதல், இரண்டறக்கலத்தல், மாற்றமடைதல், அவதாரம் எடுத்தல் ஆகிய அம்சங்களைக்கொண்ட ஹுலூல், இத்திஹாத் எனப்படும் இரண்டு உள்ளமைகள் இருப்பதாகக் கூறும் ஷிர்க்கான கொள்கையாகும். சில சந்தர்ப்பங்களில் இந்துக்களின் அத்துவைதம் ஒரு உள்ளமை மட்டும் இருப்பதாக கூறினாலும் இறை தன்மைகள் தொடர்பில் பல ஷிர்க்கான கருத்துக்களைக் கொண்டுள்ளன. இஸ்லாமிய அத்துவைதம் ஒரு உள்ளமை மாத்திரமே இருப்பதாகவும் அந்த உள்ளமைக்கே சகல செயல்களும் சகல பண்புகளும் இருப்பதாகவும் வலியுறுத்தி அல்குர்ஆன், அல்ஹதீதின் அடிப்படையில் ஷிர்க்கை முற்றாக மறுக்கும் தூய ஈமானாகும்.

இஸ்லாமிய அத்துவைதம் பேசுவோரை இந்து மத ஞானம் பேசுகின்றனர் என்று குற்றம் சாட்டி இஸ்லாமிய அத்துவைதத்தை மறுப்போர், இறைவன் வேறு படைப்பு வேறு என்ற நம்பிக்கையிலேயே இருக்கின்றனர். இவர்கள் இரண்டு சுயமான உள்ளமைகள் இருப்பதாக வலியுறுத்தும் இந்து ஞானியான மத்வாச்சரியாரின் துவைத சித்தாந்தத்தையே தமது நம்பிக்கையாகக்கொண்டுள்ளனர் என்பதையும் இவர்களின் நம்பிக்கையும் இந்துமத ஞானத்தின் தாக்கம் தான் என்று எம்மால் குற்றம் சுமத்த முடியும் என்பதையும் இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

ஒரு இஸ்லாமிய தத்துவம் அல்லது நம்பிக்கை இன்னொரு மதத்தில் பேசப்படுகின்றதா என்பதையும் அந்த நம்பிக்கை போன்ற நம்பிக்கையை நாமும் நம்பியிருக்கின்றோமா என்பதையும் இஸ்லாமியர்களாகிய நாம் ஆராயவேண்டிய அவசியமில்லை. நமது நம்பிக்கை அல்குர்ஆன் அல்ஹதீதின் அடிப்படையில் அமைந்துள்ளதா? ஸஹாபாக்களும் இஸ்லாமிய வரலாற்றில் தோன்றிய நேர்வழி பெற்ற இமாம்களும் ஸூபியாக்கள் எனப்படும் இஸ்லாமிய மெய்ஞ்ஞானிகளும் அல்குர்ஆன் அல்ஹதீதுக்கு அளித்துள்ள விளக்கங்களின் அடிப்படையில் நமது ஈமான் அமைந்துள்ளதா என்பதையே நாம் ஆராய்ந்து அதன்படி நம்பிக்கை கொள்ளவேண்டும்.

நாம் கொண்டுள்ள ஒரு நம்பிக்கையை இந்துக்களும் கொண்டிருக்கலாம் ஏனைய மதத்தவர்களும் கொண்டிருக்கலாம் அதற்காக அந்த நம்பிக்கை அவர்களுக்கு சொந்தமானது என நாம் முடிவு செய்யமுடியாது. எமது ஈமான் இஸ்லாமிய மூலாதாரங்களை மையப்படுத்தி அமைந்துள்ளதா என்பதையே நாம் கவனிக்க வேண்டும்.



## அல்ஹுலூல் – இறங்குதல்

الحلول : أن يحل احد الشيئين فى الاخر

அல்ஹுலூல் என்பது ஒரு பொருள் இன்னொரு பொருளில் வந்து இறங்குதல் என்பதை குறிக்கின்றது.

உதாரணம் :- பூவில் வண்டு வந்து இறங்குதல், பாத்திரத்தில் நீர் இறங்கியிருத்தல், வயிற்றினுள் உணவு இறங்கியிருத்தல்

இவ்வாறு ஒரு பொருள் இன்னொரு பொருளில் இறங்கியிருப்பதற்கு இரண்டு பொருட்கள் - இரண்டு உள்ளமைகள் அவசியமாகின்றது. இதுபோல் அல்லாஹ் தஆலா படைப்புகள் அனைத்திலும் இறங்கியிருக்கின்றான் என்ற நம்பிக்கை அல்லது அல்லாஹ் தஆலா சில விஷேட படைப்புகளில் இறங்கியிருக்கின்றான் என்ற நம்பிக்கை ஷிர்க்கான நம்பிக்கை. காரணம் அல்லாஹ் என்று ஒரு சுயமான உள்ளமையும் படைப்பு என்று மற்றொரு சுயமான உள்ளமையும் இருப்பதாக இங்கு நம்பவேண்டியேற்படுகின்றது அத்துடன் அல்லாஹ்தஆலாவின் பரிசுத்த தன்மைகளுக்கு இது குறைபாட்டை ஏற்படுத்துவதாகவும் அமைகின்றது. இஸ்லாத்தின் பார்வையில் இரண்டு சுயமான உள்ளமைகள் இருப்பதாக நம்புதல் ஷிர்க் - இணையாகும்.

## அல் இத்திஹாத் – இரண்டறக்கலத்தல்

الاتحاد : امتزاج الشيئين واختلاطهما حتى يصيرا شيأ واحدا

அல் இத்திஹாத் என்றால் இரண்டு பொருள் ஒன்று மற்றொன்றுடன் கலந்து ஒரே பொருளாக மாறுதல் என்பதை குறிக்கின்றது.

உதாரணம் :- சீனி நீருடன் கலந்து சீனியும் நீரும் ஒரே பொருளாக மாறுதல், உணவு சமிபாடடைந்து சத்தாக மாறுதல்

இவ்வாறு ஒரு பொருள் இன்னொரு பொருளுடன் கலந்து ஒரே பொருளாக மாறுவதற்கு இரண்டு பொருட்கள் - இரண்டு உள்ளமைகள் அவசியமாகின்றது. இதுபோல் அல்லாஹ் தஆலா அனைத்து படைப்புகளுடனும் கலந்து ஒன்றாகிவிட்டான் என்ற நம்பிக்கை அல்லது அல்லாஹ் தஆலா சில விஷேட படைப்புகளுடன் கலந்து ஒன்றாகிவிட்டான் என்ற நம்பிக்கை ஷிர்க்கான நம்பிக்கை. காரணம் அல்லாஹ் என்று ஒரு சுயமான உள்ளமையும் படைப்பு என்று மற்றொரு சுயமான உள்ளமையும் இருப்பதாக இங்கு நம்பவேண்டியேற்படுகின்றது. அத்துடன் அல்லாஹ்தஆலாவின் பரிசுத்த தன்மைகளுக்கு இது குறைபாட்டை ஏற்படுத்துவதாகவும் அமைகின்றது. இவ்வாறு இரண்டு சுயமான உள்ளமைகள் இருப்பதாக நம்புதல் இஸ்லாத்தின் பார்வையில் ஷிர்க் - இணையாகும்.

இந்து மதத்தில் பேசப்படும் அத்துவைதம் இரண்டு உள்ளமைகள் இருப்பதாக வலியுறுத்தும் ஹுலூல், இத்திஹாத் கொள்கையை அடிப்படையாகக்கொண்டது அத்துடன் இறை பண்புகள் தொடர்பாக இஸ்லாத்திற்கு மாற்றமான கருத்துக்களைக் கொண்டது. ஆனால் இஸ்லாமிய அத்துவைதம் சுயமான உள்ளமையான அல்லாஹ் மட்டுமே இருப்பதாக வலியுறுத்தி ஈருள்ளமைக் கொள்கையான ஹுலூல், இத்திஹாத் கொள்கையை முற்றாக மறுக்கின்றது.

## தௌஹீத் / வஹ்ததுல் வுஜூத் / இஸ்லாமிய அத்துவைதம்

தௌஹீத் என்பதும் வஹ்ததுல் வுஜூத் என்பதும் இஸ்லாமிய அத்துவைதம் என்பதும் வெவ்வேறு கோட்பாடுகள் அல்லது நம்பிக்கைகள் என்று பலர் நினைத்துக் கொண்டிருக்கின்றனர். இவர்கள் தௌஹீத் என்பது இஸ்லாம் என்றும், வஹ்ததுல் வுஜூத் என்பதும் இஸ்லாமிய அத்துவைதம் என்பதும் குப்ர் - இறை நிராகரிப்பு என்றும் கூறிவருகின்றனர். இவ்வாறு கூறுபவர்கள் இஸ்லாமிய கொள்கையை சரியாகப் புரிந்து கொள்ளாதவர்கள் என்றுதான் நாம் சொல்ல முடியும்.

இஸ்லாமிய கொள்கை பற்றி பேசும் ஸூபிஞானிகளும் ஷெய்குமார்களும் தௌஹீத் என்பதும் வஹ்ததுல் வுஜூத் என்பதும் இஸ்லாமிய அத்துவைதம் என்பதும் பெயரில் வேறுபட்டாலும் கருத்திலும் சாராம்சத்திலும் இவை அனைத்தும் ஒன்றேயாகும் என்று கூறுகின்றனர்.



## தௌஹீத்

توحيد தௌஹீத் என்பதன் பொருள் ஒன்றாக்குதல் / அத்துவைதமாக்குதல் / ஏகத்துவம் செய்தல் என்பதாகும்.

அல்லாஹ் தஆலா ஒருவன். ஒருவனாகிய அவனை ஒன்றாக்குதல் எப்படி? ஒன்றை ஒன்றாக்குதல் அசாத்தியம். பலதை ஒன்றாக்குவதே சாத்தியம். எனவே எண்ணத்தில் பலதாக எண்ணிக் கொண்டிருக்கும் வஸ்த்துக்கள் அனைத்தும் உள்ளமையில் ஒன்றேயாகும் என்பதை நம்புவதே توحيد தௌஹீத் - ஒன்றாக்குதல், அத்துவைதமாக்குதல் / ஏகத்துவம் செய்தல் ஆகும். தௌஹீத் என்பதற்கு ஏகத்துவம் என்றும் பொருள் சொல்லப்படுகிறது. ஏகம் என்ற சமஸ்கிருத சொல்லுக்கு ஒன்று என்பது பொருள். ஏகத்துவம் என்றால் ஒரே தத்துவம் என்பது பொருளாகும். பலதாய் தோன்றும் அனைத்தும் ஒரே தத்துவம்தான் என்பதை அது கருதுகின்றது.

தௌஹீதை ஸூபிகள் 03 வகையாக நோக்குகின்றனர்.

01. توحيد الأفعال - செயல்களை ஒன்றாக்குதல்/செயல்களை ஏகத்துவம் செய்தல்/செயல்களை அத்துவைதமாக்குதல்.

02. توحيد الصفات - பண்புகளை ஒன்றாக்குதல்/பண்புகளை ஏகத்துவம் செய்தல்/பண்புகளை அத்துவைதமாக்குதல்.

03. توحيد الذات - உள்ளமையை ஒன்றாக்குதல்/உள்ளமையை ஏகத்துவம் செய்தல்/உள்ளமையை அத்துவைதமாக்குதல்.

இம்மூன்று வகை தௌஹீதும் நம்பிக்கை அல்லது எண்ணத்தைப் பொறுத்ததாகும். செயல்களும், பண்புகளும் உள்ளமையும் பலதென்று நம்பிக் கொண்டிருக்கும் மனிதன் இவை அனைத்தும் ஒன்றேயாகும் என நம்புவதே தௌஹீதாகும்.

## توحيد الأفعال (தௌஹீதுல் அப்ஆல்) செயல்களை ஒன்றாக்குதல் / செயல்களை ஏகத்துவம் செய்தல் / செயல்களை அத்துவைதமாக்குதல்.

அல்லாஹ் தஆலா இந்த சிருஷ்டிகளில் தனது தாத் - உள்ளமையையும் தனது ஸிபாத் - பண்புகளையும், தனது அப்ஆல் - செயல்களையும் மறைத்து வைத்துள்ளான். எல்லா செயல்களும் அல்லாஹ்வில் நின்றே நடைபெறுகின்றன. உள்ளமையில் அவனைத்தவிர எந்தவொரு செயலையும் யாராலும் செய்ய முடியாது.

لا فـاعــل إلا الله கண் இமைப்பதாயினும் அது அவனால்தான் முடியுமேதவிர மனிதனால் முடியாது. இந்த இரகசியத்தை இலகுவில் புரிந்து கொள்ள முடியாமல் அவன் மறைத்து வைத்துள்ளான். அல்லாஹ்வின் செயல்கள் பற்றிய ஞானத்தை ஒரு மனிதனுக்கு அவன் வழங்கும்போது சகல செயல்களும் அல்லாஹ்வின் செயலே என்பதை கண்சாட்சியாகவும் அனுபவரீதியாகவும் அந்த மனிதனால் உணர்ந்து கொள்ள முடியும்.

இவ்வாறு அனைத்து செயல்களும் அல்லாஹ்வின் செயலே என்பதை நம்பி அனுபவத்தில் உணர்ந்து வாழ்ந்தவர்களே விசாரணையின்றி சுவர்க்கத்தில் நுழையும் எழுபதாயிரம் பேர்களாவர். இவர்களை விசாரணை செய்யவதற்கு இவர்களுக்கென்று எந்த சுயமான செயலுமில்லை. எந்த செயலும் செய்யாதவர்களை விசாரணை செய்ய முடியாது.

இவர்கள் அல்லாதவர்கள் செயல்கள் அனைத்தும் அல்லாஹ்வுக்குரியதே என பெயரளவில் நம்பியிருந்தாலும் தமக்கென்று சுயமான செயல்கள் இருப்பதாகவும் ஏனைய படைப்புகளுக்கும் சுயமான செயல்கள் இருப்பதாகவும் நம்பியிருந்தவர்கள். இதனால் பிறரின் செயல்களால் மகிழ்ச்சியும் கோபமும் இவர்களுக்கு ஏற்பட்டது.

இவர்களிடம் எல்லாச் செயல்களும் அல்லாஹ்வின் செயலே என்ற பெயரளவிலான நம்பிக்கை மாத்திரம் இருந்ததே தவிர அனுபவரீதியான நடைமுறை இருக்கவில்லை.இவர்களுக்கு மறுமையில் விசாரணை உண்டு.

எச்செயல் யாரால் நிகழ்ந்தாலும் அது அல்லாஹ்வினாலேயே நிகழ்ந்தது. எனவே செயல்கள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியன என்ற



நம்பிக்கையின் மூலம் செயல்களில் தௌஹீத் செய்தல், செயல்களை ஒன்றாக்குதல், செயல்களை அத்துவைதமாக்கல் தௌஹீதின் முதல் அம்சமாகும்.

பல்வேறு செயல்கள் பல சிருஷ்டிகளிடம் வெளியாகும்போது அது அல்லாஹ்வின் செயலாக எவ்வாறு இருக்க முடியும்?. அப்படியாயின் அல்லாஹ் எங்கோ இருந்து கொண்டு தனது படைப்புகளின் செயல்களை வெளிப்படுத்துகின்றானா? இவ்வாறு நாம் நம்பிக்கை கொண்டால் அல்லாஹ் என்ற உள்ளமையில் இருந்து செயல்கள் பிரிந்து வந்து படைப்பு என்ற உள்ளமையில் சேர்ந்து செயலாக வெளிப்படுகின்றது என்று சொல்ல வேண்டி ஏற்படும். இதன்போது இரண்டு உள்ளமைகள் இருப்பதாகவும், அல்லாஹ்வின் செயல் அவனில் இருந்து பிரிந்து வந்து விட்டதாகவும் நாம் நம்ப வேண்டியேற்படும். இது ஷிர்க்கை ஏற்படுத்தும் நம்பிக்கை. ஒரு படைப்பின் செயலைக்கூட அந்த படைப்பிலிருந்து பிரிக்க முடியாதபோது படைத்தவனின் செயலை எவ்வாறு அவனில் இருந்து பிரிக்க முடியும். இது அசாத்தியமானதும் அல்லாஹ்வின் பரிசுத்தத் தன்மைக்கு பொருத்தமற்றதுமாகும்.

அல்லாஹ்வின் செயல்கள், அவனைவிட்டும் பிரியாத நிலையில் அவன் தன்னிலேயே வெளிப்படுகின்றன. படைப்புகள் அவனது உள்ளமைக்கு வேறானவையல்ல. அவனது தாத்தின் - உள்ளமையின் தோற்றங்களே படைப்புகளாக இருப்பதால் அவற்றில் வெளியாகும் செயல்கள் அனைத்தும் அவனில் வெளியாகும் அவனது செயல்களே. இதுவே توحـــيد الأفعــــــال செயல்களை ஒன்றாக்குதல், செயல்களை ஏகத்துவம் செய்தல் என்பதாகும்.

## توحيد الصفات (தௌஹீதுஸ் ஸிபாத்) பண்புகளை ஒன்றாக்குதல் / பண்புகளை ஏகத்துவம் செய்தல் / பண்புகளை அத்துவைதமாக்குதல்.

பண்புகள் அனைத்தும் அல்லாஹ்வின் பண்புகளே என பண்புகளை ஒன்றாக்குதல் தௌஹீதின் இரண்டாவது அம்சமாகும். பல்வேறு பண்புகள் படைப்புகளில் வெளியாகின்றன. குறிப்பாக قـــدرة - சக்தி, ارادة – நாட்டம், علم - அறிவு, حياة - உயிர், سمع - கேள்வி, بصــــــــر - பார்வை, كلام - பேச்சு ஆகிய ஏழு பண்புகளும் படைப்புகளில் காணப்படுகின்றன.

இவை குறித்த கட்டுப்பாடுடனும் எல்லையுடனும் படைப்புகளில் செயல்படுகின்றன. இவை எங்கிருந்து வந்தன? இவை யாருடைய பண்புகள்? இவை அல்லாஹ்வில் இருந்தே வந்தன. இவை அல்லாஹ்வின் பண்புகள்தான்.

அல்லாஹ்வின் கட்டுப்பாடற்ற பரிசுத்த பண்புகள் படைப்புகளில் கட்டுப்பாட்டுடன் வெளியாகின்றன. இந்த பண்புகள் பல சிருஷ்டிகளில் வெளியாகினாலும் இவை அனைத்தும் அல்லாஹ்வின் பண்புகள் என பண்புகளை ஒன்றாக்குதல் توحيد الصفات - தௌஹீதுஸ் ஸிபாத் ஆகும்.

மேற்குறிப்பிட்ட ஏழு பண்புகளும் அல்லாஹ்விலிருந்தே இந்த படைப்புகளுக்கு வந்தன என்பதை யாரும் மறுக்க முடியாது. அவ்வாறாயின் அல்லாஹ்விலிருந்து இந்த பண்புகள் பிரிந்து வந்து படைப்புகளில் சேர்ந்துவிட்டனவா? இவ்வாறு நாம் நம்பிக்கை கொண்டால் இரண்டு உள்ளமைகள் இருப்பதாகவும் அல்லாஹ்வின் பண்புகள் அவனை விட்டும் பிரிந்து வந்துவிட்டதாகவும் நம்ப வேண்டியேற்படும். இது ஷிர்க்கை ஏற்படுத்தும் நம்பிக்கை. ஒரு பண்பு அது எதில் தங்கியுள்ளதோ அதை விட்டும் ஒருபோதும் பிரியாது.

الصفة لا تفارق الموصوف
சீனியை விட்டும் அதன் பண்பாகிய இனிப்பை தனியாக பிரிக்க முடியாது. மிளகாயிலிருந்து அதன் பண்பாகிய காரத்தை தனியாக பிரிக்க முடியாது. இதுபோல் அல்லாஹ் தஆலாவிலிருந்து அவனது பண்புகளை பிரிக்க முடியாது. அவை பிரிந்து வரவும் மாட்டாது.

قدرة என்ற சக்தி அல்லாஹ்வுடையது. அது அவனது தாத் - உள்ளமையில் தங்கியுள்ளது. அவனில் தங்கியுள்ளது. இந்த சக்தி அவனை விட்டும் தனியாக பிரியாது. அவ்வாறாயின் படைப்புகளுக்கு எவ்வாறு சக்தி வந்தது?

علم எனும் அறிவு அல்லாஹ்வுடையது. அது அவனது தாத்-உள்ளமையில் தங்கியுள்ளது. அவனிலேயே உள்ளது. இந்த அறிவு அவனை விட்டும் தனியாக பிரியாது. அவ்வாறாயின் படைப்புகளுக்கு எங்கிருந்து அறிவு வந்தது?



இவ்வாறு இந்த 07 பண்புகளையும் நாம் சிந்திக்க முடியும். இந்த 07 பண்புகளும் அல்லாஹ்வை விட்டும் பிரியாமல் எப்படி படைப்புகளில் வந்து சேர்ந்தது.? அல்லாஹ்வின் பண்புகள் அவனின் உள்ளமையை விட்டும் பிரியாமல் அவனிலேயே வெளிப்படுகின்றன. படைப்புகள் அவனுக்கு வேறானவை அல்ல அவன் தானானவைதான். அவற்றில் வெளியாகும் பண்புகள் அனைத்தும் அவனது பண்புகளே. இதுவே توحيد الصـــــــــفات பண்புகளை ஒன்றாக்குதல், பண்புகளை ஏகத்துவம் செய்தல், பண்புகளை அத்துவைதமாக்குதல் ஆகம்.

## توحيد الذات (தௌஹீதுத் தாத்)
## உள்ளமையை ஒன்றாக்குதல் / உள்ளமையை ஏகத்துவம் செய்தல் / உள்ளமையை அத்துவைதமாக்குதல்.

பலதாய் தோற்றும் உள்ளமைகள் அனைத்தும் அல்லாஹ்வின் உள்ளமையே என உள்ளமையை ஒன்றாக்குதல் தௌஹீதின் மூன்றாவது அம்சமாகும். ஆயினும் இதுவெ யதார்த்தத்தில் தௌஹீதின் முதன்மையான அம்சமாகும்.

அல்லாஹ் மாத்திரமே சுயமான உள்ளமை உடையவன். அவனுக்கு மாத்திரமே வுஜூத் அல்லது தாத் எனப்படும் உள்ளமை உண்டு. படைப்புகளுக்கு தனியான வுஜூத் - உள்ளமை கிடையாது. படைப்புகள் சுயமான உள்ளமையுடன் இருப்பதுபோல் தோன்றுகின்றன. இந்த உள்ளமைத் தோற்றம் எங்கிருந்து வந்தது? அல்லாஹ்விடமிருந்தே வந்தது.அவனிலிருந்து இந்த உள்ளமை பிரிந்து வரமுடியாது. இது அசாத்தியமானதாகும். அத்துடன் அவனது பரிசுத்த தன்மையில் குறை ஏற்படுத்துவதுமாகும். இவ்வாறு அல்லாஹ்விலிருந்து படைப்புகளின் உள்ளமை பிரிந்து வந்துள்ளது என்று நம்புவது ஷிர்க்கான நம்பிக்கையாகும்.

அல்லாஹ் தஆலாவின் உள்ளமை அவனை விட்டும் பிரியாமல் படைப்புகளாகத் தோன்றுகின்றது. படைப்புகளுக்கு தனியான உள்ளமை இல்லை. படைப்புகளின் உள்ளமையாகத் தோன்றுவது அல்லாஹ்வின் உள்ளமைதான் என நம்புவதே توحـــــيد الذات உள்ளமையை ஒன்றாக்குதல், உள்ளமையை ஏகத்துவம் செய்தல், உள்ளமையை அத்துவைதமாக்குதல் ஆகும்.

எனவே செயல்களிலும் பண்புகளிலும் உள்ளமையிலும் கூட்டு அல்லது இணையில்லை. காரணம் இரண்டு வஸ்த்துக்கள் இல்லை. செயல்களும் பண்புகளும் உள்ளமையும் அல்லாஹ்வுக்கு மாத்திரமே இருக்கின்றன. இதுவே தௌஹீத், ஏகத்துவம், அத்துவைதம் ஆகும்.

இதைப் போதிக்கவே லா இலாஹ இல்லல்லாஹ் என்னும் கலிமாவை இறைத் தூதர்கள் போதித்தார்கள். லா இலாஹ இல்லல்லாஹ் எனும் திருக் கலிமாவின் பிரதான நோக்கம் தௌஹீதுல் உலூஹிய்யஹ் அல்லது தௌஹீதுல் இபாதா எனும் வணக்க வழிபாடுகளில் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துதல் அல்லது வணக்க வழிபாடுகளில் ஏகத்துவம் செய்தல் மட்டுமல்ல. இது திருக் கலிமாவின் மூலம் எதிர்பார்க்கப்படும் செயல்பாடுகளில் ஒன்று. வணக்க வழிபாடுகளில் மட்டும் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவது திருக் கலிமாவின் பிரதான நோக்கமாயின் அது ஷிர்க்கை முற்றாக இல்லாதொழிப்பதற்கு வந்த மூல வாக்கியமாக இருக்க முடியாது.

மனிதர்களின் மனங்களிலுள்ள ஷிர்க்கெனும் இணையை முற்றாக நீக்க வந்த மூல வாக்கியமான லா இலாஹ இல்லல்லாஹ், வணக்க வழிபாடுகளில் மாத்திரம் ஷிர்க்கை நீக்கினால் அது பூரணமான வாக்கியமாக இருக்க முடியாது.

லா இலாஹ இல்லல்லாஹ் என்பதன் பொருள் “வணக்கத்திற்குத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை” என வைத்துக் கொண்டால் “வணக்கத்திற்குத் தகுதியற்றவன் அல்லாஹ்வைத் தவிர ஒருவன் இருக்கிறான்” என்ற கருத்து வந்துவிடும். அதாவது வணங்கப்பட தகுதியற்ற படைப்புகள் சுயமாக இருக்கின்றன என்ற கருத்துண்டாகும். அத்துடன் உணவளிப்பவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாரும் இருக்கின்றானா? படைப்பவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாரும் இருக்கின்றானா? உயிர்பிப்பவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாரும் இருக்கின்றானா? போன்ற வினாக்களும் உண்டாகும். இவ் வினாக்களுக்கான விடைகள் நிச்சயமாக ஷிர்க்கை முற்றாக ஒழிக்க வந்த திருக்கலிமாவில் இருக்கவே வேண்டும். வணக்கத்திற்குத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை என்ற பொருள்தான் திருக்கலிமாவின் பொருள் என்றால் இந்த வினாக்களுக்கு திருக்கலிமாவில் விடைகள் இல்லை என்றே முடிவு செய்ய வேண்டும்.



லா இலாஹ இல்லல்லாஹ் எனும் திருக்கலிமா அல்குர்ஆனின் திருவசனங்களில் ஒன்று. உலகில் தோன்றிய நபிமார்கள் பேசிய வார்த்தைகளில் மிகச் சிறந்த வார்த்தை. இது ஷிர்க் எனும் இணையை வேரறுக்க வந்த வார்த்தை. இந்த வார்த்தை பூரணமாக தௌஹீதை வலியுறுத்த வேண்டும். உள்ளமையிலும் செயல்களிலும் பண்புகளிலும் ஒருமைத் தன்மையை நிலை நிறுத்தி அல்லாஹ் மாத்திரமே இருக்கின்றான். அவனுக்கே எல்லாச் செயலும் உரியன. அவனுக்கே சகல பண்புகளும் உரியன என்று ஏகத்துவத்தை வலியுறுத்த வேண்டும். வணக்க வழிபாடுகளில் மட்டும் தௌஹீதை வலியுறுத்தி ஏகத்துவத்தை குறுகிய வட்டத்தில் அடைக்க முடியாது.

எனவே லா இலாஹ இல்லல்லாஹ் என்பதன் பொருள்...

01.படைத்தல், வளர்த்தல், பரிபாலித்தல், உணவளித்தல், உயிர்ப்பிக்கச் செய்தல், மரணிக்கச் செய்தல் மற்றுமுள்ள எல்லா செயல்களும். அச் செயல்கள் படைப்புகளில் வெளியானாலும் அவை அனைத்தும் அல்லாஹ்விலிருந்து விட்டும் பிரியாத அவனது செயல்களே என்பதையும்

02. சக்தி, நாட்டம், அறிவு, உயிர், கேள்வி, பார்வை, பேச்சு ஆகிய பண்புகளும் மற்றுமுள்ள எல்லாப் பண்புகளும். அந்தப் பண்புகள் படைப்புகளில் வெளியானாலும் அவை அனைத்தும் அல்லாஹ்விலிருந்து விட்டும் பிரியாத அவனது பண்புகளே என்பதையும்

03. வணக்க வழிபாடுகள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியன என்பதையும்

04. வுஜூத் எனும் உள்ளமை அல்லாஹ்வுக்கு மட்டுமே இருக்கின்றது. படைப்புகளுக்கு தனியான உள்ளமை, அல்லாஹ்வை விட்டும் பிரிந்த வேறான உள்ளமை இல்லை என்பதையும் படைப்புகளின் உள்ளமை அல்லாஹ்வின் உள்ளமைதான் என்பதையும் வலியுறுத்தக் கூடியதாக, பூரணமான தௌஹீதை நிலைநாட்டக் கூடியதாக, ஷிர்க்கை முற்றாக நீக்குவதாகவே அமைய வேண்டும். அதுவே பூரணத்துவமான தௌஹீதை நிலைநாட்டும். இந்த அடிப்படையில் நோக்கும்போது லா இலாஹ இல்லல்லாஹ் என்பதன் பொருள் அல்லாஹ்வுக்கு வேறான எந்த சிருஷ்டியும் இல்லை என்பதாகும். அல்லாஹ் மட்டுமே இருக்கிறான். அவனைத் தவிர எதுவுமில்லை. எந்தச் செயலுமில்லை. எந்தப் பண்புமில்லை என்ற தூய்மையான தௌஹீதை/ ஏகத்துவத்தை/

வஹ்ததுல் வுஜூதை/ அத்துவைதத்தை நம்பியவனே உண்மையான இறை விசுவாசியாவான். இங்கு தௌஹீத்/ ஏகத்துவம்/வஹ்ததுல் வுஜூத்/அத்துவைதம் என சொற்கள் பலதாக இருந்தாலும் கருத்து ஒரே கருத்தாகும். நம்பிக்கை ஒரே நம்பிக்கையாகும்.

## "வஹ்ததுல் வுஜூத்"

"வஹ்ததுல் வுஜூத்" என்பது உள்ளமை ஒன்று அல்லது மெய்ப் பொருள் ஒன்று எனும் பொருள் தருகின்றது. "வஹ்தத்" என்பது ஒன்று என்பதைக் குறிக்கின்றது. "வுஜூத்" என்பது உள்ளமை என்பதைக் குறிக்கின்றது. "உள்ளமை" என்பது "இல்லாமை" என்பதற்கு மாற்றமானது. "வுஜூத்" உள்ளமை என்பது அல்லாஹ்வின் "தாத்" எனும் மெய்ப் பொருளைக் குறிக்கின்றது. எனவே "வஹ்ததுல் வுஜூத்" என்பது "உள்ளமை ஒன்று அல்லது மெய்ப் பொருள் ஒன்று" அல்லாஹ் ஒருவன் எனும் பொருளைத் தருகின்றது. ஸுபியாக்கள் வஹ்ததுல் வுஜூத் என்பதற்கு ஒரு உள்ளமையின் வெளிப்பாடு என்று பொருள் கொள்கின்றனர்.

வுஜூத் - உள்ளமை மூன்று வகைப்படுகின்றது.

01.வாஜிபுல் வுஜூத் : இது தன்னைக் கொண்டு நிலைபெற்றது. இது நிலைபெறுவதற்கு மற்றொன்று தேவையில்லை. உதாரணம் : அல்லாஹ் தஆலாவின் "தாத்" எனும் மெய்ப் பொருள். (قائم بنفسه)
02. மும்கினுல் வுஜூத் : எப்போதும் இன்னொன்றைக் கொண்டு நிலைபெற்றது. இது நிலை பெறுவதற்கு எப்போதும் இன்னொன்று தேவைப்படும். உதாரணம் : நிறங்கள் இவை தன்னைக் கொண்டு மட்டும் நிலைபெற முடியாது. இன்னொன்றைக் கொண்டே நிலை பெறுகின்றன. வெள்ளை நிறம் பாலில் தென்படுவது போல, அல்லாஹ்வின் படைப்புகள் அவை தன்னைக் கொண்டு மட்டும் நிலைபெறமாட்டாது. அல்லாஹ்வைக் கொண்டே நிலைபெறுகின்றன. (قائم بغيره)
03. மும்தனிஉல் வுஜூத் : இது தன்னைக் கொண்டு நிலைபெறுவதுமில்லை இன்னொன்றளவில் தேவையாவதுமில்லை. உதாரணம் : عـــنقاء எனப்படும் "யானை இராஞ்சிப் பறவை" இது பெயரளவில் உள்ளதேதவிர யதார்த்தத்தில் இல்லாதது.



## "வஹ்ததுல் வுஜூத்" கோட்பாடு

உள்ளமை ஒன்று, மெய்ப் பொருள் ஒன்றுதான். படைப்புகள் அனைத்தும் அந்த உள்ளமையின் வெளிப்பாடுகளாகும். அதாவது அல்லாஹ் ஒருவன், அவன்தான் உள்ளமை (வாஜிபுல் வுஜூத்).படைப்புகள் அனைத்தும் அந்த உள்ளமையின் வெளிப்பாடுகளாகும் (மும்கினுல் வுஜூத்). படைப்புகள் சுயமான உள்ளமை அற்றவை. படைப்புகள் அனைத்தும் அந்த அல்லாஹ் என்ற மெய்ப்பொருள் தானானவை. அன்றி அந்த மெய்ப் பொருளுக்கு வேறானவையல்ல. அந்த உள்ளமை படைப்புகள் என்ற பல்வேறு தோற்றங்களில் தோன்றியுள்ளது. படைப்புகள் பல்வேறு தோற்றங்களில் தோன்றினாலும் அல்லாஹ் என்ற உள்ளமையே அவ்வாறு தோன்றுகின்றது. படைப்புகள் மாய தோற்றத்தில் தென்படுகின்றனவே தவிர யதார்த்தத்தில் படைப்புகள் என்பது இல்லை.

பஞ்சு பிடவையாகத் தோற்றுவது போலவும், தங்கம் காப்பாகத் தோற்றுவது போலவும், கடல் அலையாகத் தோற்றுவது போலவும் அல்லாஹ் என்ற உள்ளமை சர்வ படைப்புகளாகவும் தோன்றுகின்றது. சர்வ படைப்புகளும் "ஹக்" ஆகிய அல்லாஹ் தானானவைகள்தான். அவனுக்கு வேறானவைகள் அல்ல.

இங்கு ஹுலூல் என்பதற்கும் இத்திஹாத் என்பதற்கும் இடமில்லை. (ஹுலூல் இத்திஹாத் விபரம் பக்கம் 10ல் குறிப்பிடப்பட்டுள்ளது)

"வஹ்ததுல் வுஜூத்" கோட்பாட்டின்படி ஒரே உள்ளமையான அல்லாஹ்தான் ஹுலூல், இத்திஹாத் இன்றி பஞ்சு – பிடவையாக, சேட்டாக, சாரனாக, தொப்பியாக தோற்றுவது போலவும், தங்கம் - காப்பாக, மாலையாக, மோதிரமாக தோற்றுவது போலவும், கடல் - அலையாக, நுரையாக தோற்றுவது போலவும், இரும்பு – திறப்பாக, பூட்டாக தோற்றுவது போலவும் படைப்புகளாக தோற்றமளிக்கின்றான். இங்கு இரண்டு உள்ளமைகள், இரண்டு பொருட்கள் இல்லை. எனவே ஷிர்க் எனும் இணை கூட்டு இல்லை. இரண்டு பொருட்கள் இல்லாததால் இணை அசாத்தியம்.

பஞ்சுதான் பிடவையாக, சேட்டாக, சாரனாக, தொப்பியாக தோற்றுகின்றது. கடல்தான் அலையாக, நுரையாக தோற்றுகின்றது. தங்கம்தான் காப்பாக, மாலையாக, மோதிரமாக தோற்றுகின்றது. இரும்புதான் திறப்பாக, பூட்டாக தோற்றுகின்றது. இதுபோல் அல்லாஹ்தான் படைப்புகளாக தோற்றமளிக்கின்றான். இங்கு இரண்டு உள்ளமைகள் இல்லை.உள்ளமை அல்லாஹ் மாத்திரம்தான். அந்த உள்ளமைதான் சர்வ படைப்புகளாகத் தோற்றுகின்றது.

வஹ்ததுல் வுஜூத் கொள்கை அல்லாஹ் ஒருவன் என்பதையும், அவன் தனித்தவன் என்பதையும், உள்ளமை ஒன்று என்பதையும் வலியுறுத்துகின்றது.

இதே கருத்தையே அல்குர்ஆனும் அல்ஹதீதும் வலியுறுத்துகின்றன.

لا إله إلاالله وحده لا شريك له - லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக லஹு

லா இலாஹ இல்லல்லாஹு : அல்லாஹ்வுக்கு வேறான எந்த சிருஷ்டியும் இல்லை. அவன் மாத்திரமே இருக்கின்றான்.

வஹ்தஹு : அவன் தனித்தவன். உள்ளமை அவனுக்கு மட்டுமே உண்டு. உள்ளமையில் அவன் தனித்தவன். பண்புகள் அவனுக்கு மட்டுமே இருக்கின்றன. பண்புகளில் அவன் தனித்தவன். செயல்கள் அவனுக்கு மட்டுமே இருக்கின்றன. செயல்களில் அவன் தனித்தவன். தனித்தவன் என்றால் எப்போதும் அவன் தனித்தவன்தான். படைப்புகளைப் படைக்கு முன்னர் அவன் தனித்தவனாக இருந்ததுபோல் படைப்புகளைப் படைத்த பின்னும் அவன் தனித்தவன்தான்.

படைப்புகளைப் படைக்கமுன் அவன் தனித்தவன் என்பதை எல்லோரும் ஏற்றுக் கொள்வார்கள். காரணம் அவன் மட்டுமே அப்போது இருந்ததால் அவன் தனித்தவனாக இருந்தான் என்பதில் சந்தேகமில்லை.

படைப்புகளைப் படைத்தபின் அவன் தனித்தவனாக இருப்பதெப்படி? தனியாக இருந்த அவன் படைப்புகளைப் படைத்ததால் படைப்புகள் உருவாகி விட்டனவே இப்போது அவன் தனித்தவனா? அவனுடன் படைப்புகளும் இருக்கின்றனவா? அவன் தனித்தவன் என்றால் படைப்புகள் இருக்கின்றனவே? அவன் தனித்தவன் அல்ல என்றால் وحده - அவன் தனித்தவன் என்பதன் அர்த்தம் என்ன?



அல்லாஹ் தஆலா படைப்புகளைப் படைக்க முன்னர் எவ்வாறு தனித்தவனாக இருந்தானோ அவ்வாறே படைப்புகளைப் படைத்த பின்னரும் அவன் தனித்தவனாகவே இருக்கின்றான். படைப்புகள் அவனுக்கு வேறானவையல்ல. அவன்தான் படைப்புகளாக இருக்கின்றான். படைப்புகள் என்பது தோற்றங்களேதவிர யதார்த்தம் அல்லாஹ்தான். எனவே அவன் மட்டுமே இருக்கின்றான். ஒரு தங்கக் கட்டி இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். வேறு எந்த ஆபரணமும் இல்லை என்று வைத்துக் கொள்வோம். இப்போது தங்கம் தனியாக இருக்கிறது. அந்தத் தங்கக் கட்டியே ஒரு மாலையாகவும், ஒரு காப்பாகவும் ஆகிவிட்டால் இப்போது தங்கத்துடன் மாலையும் காப்பும் இருக்கின்றதா? அல்லது தங்கம் மாத்திரம் தனியே இருக்கின்றதா? இப்போதும் தங்கம் மட்டுமே தனியே இருக்கின்றது. மாலை,காப்பு என்பது தோற்றங்களேதவிர யதார்த்தம் தங்கம்தான். இவ்வாறு அல்லாஹ் தனித்தவன் என்பதை தெளிவாக வலியுறுத்துகின்றது. வஹ்ததுல் வுஜூத் இதே கருத்தையே توحيد தௌஹீத் என்பதும் அத்துவைதம் என்பதும் வலியுறுத்துகின்றது.

லா ஷரீகலஹு : அவனுக்கு கூட்டு இல்லை, அவனுக்கு இணை இல்லை. இரண்டு உள்ளமை இல்லாததால் கூட்டு இல்லை. இரண்டு வஸ்த்துக்கள் இருந்தால்தான் இணை ஏற்படும். ஒரு வஸ்த்து மாத்திரம் இருந்தால் இணை ஏற்பட முடியாது. அவனுக்குக் கூட்டாக சேர்வதற்கு இன்னொரு பொருள் இல்லாததால் அவனுக்கு இணை ஏற்படுவது அசாத்தியம். மனிதர்கள் தமது எண்ணங்களில் இணையை ஏற்படுத்துகின்றனர். இதனால் முஷ்ரிக்குகளாகின்றனர். யதார்த்தத்தில் அவனுக்கு எந்தவித இணையும் இல்லவே இல்லை.

**“இணையற்றவன் என்பதைக் குறிக்கவே ஸூபிகளால் அத்துவைதம் என்ற தமிழ்ச் சொல் பாவிக்கப்படுகின்றது. அத்துவைதம் என்பது இரண்டற்ற நிலை, இணையற்ற நிலையாகும்”** இதையே தௌஹீத் எனும் அறபுச் சொல்லும் வலியுறுத்துகின்றது. மொழிகளுக்கு ஏற்ப சொற்கள் மாறுபடுகின்றனவேதவிர மையக் கருத்து மாறுபடவில்லை என்பது அறிஞர்களுக்கு மறைவானதல்ல.

## ஷிர்க் – இணை : கூட்டு

ஷிர்க் என்பதன் பொருள் இணை அல்லது கூட்டு. ஒன்றைப்போல் இன்னொன்று இருப்பதை நாம் இணை என்று சொல்கின்றோம். அல்லாஹ்வுக்கு யதார்த்தத்தில் இணை இல்லை. மனிதன் தனது எண்ணத்திலேயே இணையை ஏற்படுத்துகின்றான். அல்லாஹ் தஆலாவுக்கு இணை இல்லை என்பதுவே இஸ்லாத்தின் அடிப்படை நம்பிக்கை. அதுவே யதார்த்தமும்கூட. அல்லாஹ் தஆலாவைப்போல் இன்னொரு வஸ்த்துவுக்கு சுயமான உள்ளமை இல்லை. அவனது செயல்களைப்போல் எந்தவொரு வஸ்த்துவுக்கும் சுயமான செயல்கள் இல்லை. அவனது பண்புகளைப்போல் எந்தவொரு வஸ்த்துவுக்கும் சுயமான பண்புகள் இல்லை. அவன் மாத்திரமே இருப்பதால் உள்ளமையும் செயல்களும் பண்புகளும் அவனுக்கு மாத்திரமே இருக்கின்றன. எனவே அவனுக்கு இணை இல்லை. இணை என்பது யதார்த்தத்தில் அசாத்தியமானது. யதார்த்தமான உள்ளமையுடையவனே வணக்க வழிபாடுகளுக்கும் தகுதியுடையவன். எனவே வணக்கமும் அவனுக்கு மட்டுமே செலுத்தப்பட வேண்டும்.

إن الله لا يغفر أن يشـرك به ويغفر ما دون ذلك لمن يشــاء ومن يشـرك بالله فقد افترى اثما عظيما (النساء ٤٨)

“நிச்சயமாக அல்லாஹ் தஆலா தனக்கு இணை வைப்பதை மன்னிக்கமாட்டான். இதைத் தவிர அவன் நாடியவர்களுக்கு மற்ற எதையும் மன்னிப்பான். யார் அல்லாஹ்வுக்கு இணை வைக்கின்றார்களோ அவர்கள் நிச்சயமாக மிகவும் பெரிய பாவத்தைக் கற்பனை செய்கிறார்கள்” என்று அல்லாஹ் கூறுகின்றான். (அன்னிஸா – 48)

அல்லாஹ்வுக்கு மட்டுமே வுஜூத் - உள்ளமை இருக்க அவன் அல்லாதவற்றுக்கு வுஜூத் - உள்ளமை இருப்பதாக நம்புவது அவனுக்கு மிக கோபத்தை ஏற்படுத்தும் விடயம். மன்னிக்க முடியாத குற்றம். இந்த குற்றத்தை அவன் மன்னிக்கமாட்டான். அது தவிரவுள்ள பாவங்களை அவன் நாடியவர்களுக்கு மன்னிப்பான். இணையற்ற, ஒப்பற்ற அவனுக்கு இணையாக அவனது வெளிப்பாடுகளான படைப்புகளுக்கு சுயமான வுஜூத் - உள்ளமை இருப்பதாக நம்பி இணை வைப்பது கற்பனையான விடயமேதவிர உண்மையல்ல. இதையே மேற்குறிப்பிட்ட திருமறை



வசனத்தில் “பெரிய பாவத்தைக் கற்பனை செய்கிறார்கள்” என அல்லாஹ் தஆலா குறிப்பிடுகின்றான்.

### இணை மூன்று வகை

01. ஷிர்க் ஜலீ – பகிரங்கமான இணை. அல்லாஹ்வை படைப்புகளில் கட்டுப்படுத்தி படைப்புகளை வணங்குதல் ஷிர்க் ஜலீ – பகிரங்கமான இணையாகும்.

சூரியன்,சந்திரன், விக்கிரகங்கள், தொழுஉருவங்கள் போன்றவற்றை வணங்குவது வெளிப்படையான இணையாகும். கட்டுப்பாடற்ற பரிசுத்தமான அல்லாஹ்வை கட்டுப்பாடுடைய குறித்த சில படைப்புகளில் மட்டும் கட்டுப்படுத்தி வணங்குவது இந்த வகையில் அடங்குகின்றது.

படைப்புகளை வணங்குவதிலிருந்து முற்றாக நீங்கி லா இலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் றஸூலுல்லாஹ் எனும் திருக்கலிமாவை உள்ளத்தால் ஏற்ற நிலையில் நாவினால் மொழிந்து கட்டுப்பாடற்ற அல்லாஹ்வை எந்தவித கட்டுப்பாடுகளுமின்றி பொதுவாக வணங்குவதன் மூலமே இந்தப் பாவத்தை அல்லாஹ் மன்னிப்பான்.

02. ஷிர்க் கபீ – மறைவான இணை. வணக்க வழிபாடுகளை அல்லாஹ்வுக்கே வெளிப்படையில் செலுத்தினாலும் உள்ளத்தால் மனவெழுச்சிக்கும் உலக ஆசாபாசங்களுக்குக் கட்டுப்பட்டு நடத்தலும் செயல்கள் படைப்புகளிலிருந்து நடைபெறுவதாக நம்புதலும் ஷிர்க் கபீ – மறைவான இணையாகும்.

இறை கட்டளைகளுக்கு வழிப்பட வேண்டிய மனிதன் மனவெழுச்சிக்கு கட்டுப்பட்டு நடத்தல் ஷிர்க் கபீ – மறைவான இணை. எல்லாச் செயல்களும் யதார்த்தத்தில் அல்லாஹ்வில் இருந்தே நடைபெறும்போது படைப்புகளிலிருந்து செயல்கள் நடைபெறுவதாக நம்புதல் ஷிர்க் கபீ – மறைவான இணையாகும்.

கலப்பற்ற தூய எண்ணத்தை மனதில் ஏற்படுத்தி மனவெழுச்சிக்கு கட்டுப்படாமல் இறைவனுக்கு மட்டுமே கட்டுப்படுவதன் மூலமும், செயல்கள் யாவும் இறைவனுக்குரியனவே என்று ஒருமைப்படுத்துவதன் மூலமும் இந்தப் பாவத்தை அல்லாஹ் மன்னிப்பான்.

03. ஷிர்க் அக்பா – மிக மறைவான இணை. அல்லாஹ்வுக்கு வேறாக படைப்புகள் தனியான உள்ளமையுடன் இருக்கின்றன என்று நம்புவது ஷிர்க் அக்பா – மிக மறைவான இணையாகும். நான் என்று தனியாக ஒருவன் இருக்கின்றேன் (அன்னிய்யத்) என்று எண்ணுவதும், படைப்புகள் அல்லாஹ்வுக்கு வேறானவை (கைரிய்யத்) என நம்புவதும் இந்த வகையில் அடங்குகின்றது.

நானும் இல்லை. படைப்புகளும் இல்லை. அல்லாஹ் மட்டுமே இருக்கின்றான் என தன்னையும் படைப்புகளையும்விட்டு அழித்து (பனா) அல்லாஹ்வில் நிலைபெறுவதன் (பகா) மூலமே இந்தப் பாவத்தை அல்லாஹ் மன்னிக்கின்றான்.

வணக்க வழிபாடுகளிலும் எண்ணத்திலும் உள்ளமையிலும் ஒருமைப்படுத்துதல், ஏகத்துவம் செய்தல், அத்துவிதமாக்குதலே இந்த இணையை விட்டும் நீங்க சரியான வழியாகும்.

இணைவைப்பதன் பாதிப்புக்களை அல்குர்ஆனில் பல இடங்களில் அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான்.

وإذ قال لقمان لابنه وهو يعظه يا بني لا تشرك بالله إن الشرك لظلم عظيم (لقمان ١٣)

“இன்னும் லுக்மான் (அலைஹிஸ் ஸலாம்) தம்புதல்வருக்கு 'என் அருமை மகனே! நீ அல்லாஹ்வுக்கு இணைவைக்காதே. நிச்சயமாக இணைவைத்தல் மிகப் பெரும் அநியாயமாகும்' என்று நல்லுபதேசம் செய்து கூறியதை நினைவுபடுத்துவீராக.

(அல்குர்ஆன் : 31:13)

இத்திரு வசனத்தில் பொதுவாக ஷிர்க் என்ற சொல் பாவிக்கப்பட்டுள்ளது. இது வணக்க வழிபாடுகளில் இணைவைப்பதை மட்டும் குறிக்கும் சொல் அல்ல. பொதுவாக இணைவைப்பதைக் குறிக்கும் சொல். எனவே முற்றாக இணைவைப்பதைத் தவிர்த்துக் கொள்ளல் வேண்டும் என்பதே இத் திருவசனத்தின் கருத்து.

ஒப்புவமையற்ற, நிகரற்ற அல்லாஹ்வுக்கு இணைவைப்பது உள்ளத்திற்கு செய்யும் அநீதி. பல படைப்புகள் இருப்பதாக நம்புவதும் இரண்டு உள்ளமைகள் இருப்பதாக நம்புவதும் இணை. அல்லாஹ் மட்டுமே இருக்க



படைப்புகளும் இருப்பதாக பொய்யாக நம்புவது பெரும் அநீதி. இதையே அல்லாஹ் மேலுள்ள திருவசனத்தில் “இணைவைத்தல் மிகப் பெரும் அநியாயம்” என்று குறிப்பிடுகின்றான்.

لا شريك له وبذلك امرت وأنا اول المسلمين (الانعام : ١٦٣)

“அவனுக்கு யாதோர் இணையுமில்லை. இதைக் கொண்டே நான் ஏவப்பட்டுள்ளேன். அவனுக்கு (வழிப்பட்டவர்களில்) முஸ்லிம்களில் நான் முதன்மையானவன்” என்று அல்லாஹ் கூறுகின்றான்.

(அல்குர்ஆன் : 06:163)

அல்லாஹ் மட்டுமே இருக்கின்றான். அவன் அல்லாதவற்றுக்கு சுயமான உள்ளமை கிடையாது. அவன் மாத்திரமே இருப்பதால் அவனுக்கு நிகராக, ஒப்பாக இருப்பதற்கு எதுவுமில்லை. எனவே அவனுக்கு இணையில்லை. இணை ஏற்படுவது அசாத்தியமானது. அவனுக்கு இணை இருப்பதாக நம்புவது – அவன் அல்லாதவற்றுக்கு சுயமான உள்ளமை இருப்பதாக நம்புவது பொய்யான நம்பிக்கை. இல்லாததை கற்பனை செய்யும் நம்பிக்கை.

இதுவரை நான் எழுதிய விடயங்களிலிருந்து இணைவைத்தல் என்பது இரண்டு சுயமான உள்ளமைகள் இருப்பதாக நம்புவதையே பிரதானமாகக் கருதுகின்றது என்பதை நீங்கள் புரிந்திருப்பீர்கள். இரண்டு சுயமான உள்ளமைகளை நம்புபவனே அந்த நம்பிக்கையின் வெளிப்பாடாக படைப்புகளை வணங்குகிறான். இந்த வணக்கம் வெளிப்படையான இணையைக் காட்டுகின்றது. இதற்கு அடிப்படைக் காரணம் அவனது துவித நம்பிக்கையாகும். துவித நம்பிக்கை ஷிர்க் - இணையாகும். இரண்டு சுய உள்ளமைகள் இருப்பதாக நம்பியவன் முஷ்ரிக் - இணைவைத்தவனாவான். ஒரு சுயமான உள்ளமை மட்டுமே இருக்கின்றது. அதுதான் அல்லாஹ் என்ற வுஜூத். அவன் மாத்திரமே சகல செயல்களுக்கும் பண்புகளுக்கும் உரியவன் என்பதை நம்புவது தௌஹீத், ஏகத்துவம், அத்துவைதம் ஆகும். இதுவே இஸ்லாம் ஆகும். இவ்வாறு நம்பிய அத்துவைதியே மு.்.மின் - விசுவாசியாவான். இரண்டில்லை என்ற அத்துவைதமே இஸ்லாம். இரண்டுள்ளது என்ற துவைதம் ஷிர்க்.

எனவே அத்துவைதம் என்ற சொல்லைப் பற்றி தெளிவாகப் புரிந்து கொள்ளாமல் உண்மையான மு..மின்களை முர்தத் - மதம் மாறியவர்கள் என்று கூறுவதும் "அத்துவைதி" என்று பழித்துரைப்பதும் இஸ்லாத்தைப் பற்றி தெளிவாகப் புரிந்து கொள்ளாதவர்களின் செயற்பாடுகளேதவிர உண்மை முஸ்லிம்களின் செயற்பாடுகள் அல்ல என்பதைப் புரிந்து நாம் செயற்பட வேண்டும்.

## ஒரு முஸ்லிமை காபிர், முஷ்ரிக், முர்தத் என்று சொல்வதன் விபரீதம்

முஸ்லிமான ஒரு மனிதனை அவன் பேசுகின்ற பேச்சின் விபரத்தை சரியாகப் புரிந்து கொள்ளாமல் அவனுடைய பேச்சின் சில கருத்துக்கள் குப்ருடைய வார்த்தையாக இருக்கும் என்ற சந்தேகத்தில் அவனுடைய பேச்சின் விளக்கத்தை அறிந்து கொள்ளாமல் அந்த மனிதனை காபிர் என்றோ முர்தத் என்றோ முஷ்ரிக் என்றோ சொல்வது அல்லது தீர்ப்புச் செய்வது அல்குர்ஆனுக்கும் அல்ஹதீதுக்கும் இஜ்மா.. கியாஸுக்கும் மாற்றமான நடைமுறையாகும்.

இவ்வாறு சொல்பவன் அல்லது தீர்ப்புச் செய்பவர் மிக மோசமான நிலைக்கு ஆளாக வேண்டி ஏற்படும்.

ومن لم يحكم بما انزل الله فأولئك هم الكافرون (مائدة ٤٤)
ومن لم يحكم بما انزل الله فأولئك هم الظالمون (مائدة ٤٥)
ومن لم يحكم بما انزل الله فأولئك هم الفاسقون (مائدة ٤٦)

அல்லாஹ் இறக்கி வைத்ததற்கு மாற்றமாகத் தீர்ப்புச் செய்தல் என்பது அல்குர்ஆனுக்கும் அல் ஹதீதுக்கும் இமாம்கள் கூறியுள்ள ஷரீஅத் சட்டங்களுக்கும் மாற்றமாக தீர்ப்புச் செய்தல் ஆகும். இவ்வாறான தீர்ப்பு நிராகரிக்கப்பட்ட தீர்ப்பாகும். இவ்வாறு தீர்ப்புச் செய்பவன் كافر ، ظالم ، فاسق ஆவான்.

قال النبي صلى الله عليه وسلم إذا قال الرجل لأخيه ياكافر فقد باء به احدهما
(رواه البخاري –٦١٠٣)

عن بن عمر ان رسول الله صلى الله عليه وسلم قال اذا قال الاخر كافر فقد كفر احدهما. ان كان الذي قال له كافرا فقد صدق. وان لم يكن كما قال فقد باء الذي قال له بالكفر
(ادب المفرد – ٤٤٠)



ومن رمى مؤمنا بكفر فهو قتله
(رواه البخاري – ٦١٠٥)

ஒரு முஸ்லிமைக் காபிர் என்று சொன்னவன் அவனைக் கொலை செய்துவிட்டான் அல்லது அந்த முஸ்லிமைக் கொலை செய்வதை ஆகுமாக்கிவிட்டான் என்பதும் இவ்வாறு சொன்ன காரணத்தினால் சொன்னவன் காபிர் ஆகிவிட்டான் என்பதும் மேலே நான் சொல்லிக் காட்டிய ஹதீஸ்களின் கருத்தாகும். உண்மையிலேயே அவனைக் கொலை செய்யாவிட்டாலும் கொலை செய்த குற்றம் இவனுக்கு ஏற்படுகின்றது.

இதேபோல்தான் முஸ்லிம்களில் ஒரு பெரும் கூட்டத்தை அவர்கள் காபிர்கள் என்று ஒருவர் சொன்னால் அல்லது தீர்ப்புச் செய்தால் அவர்கள் அனைவரையும் கொலை செய்த குற்றம் கிடைக்கும் என்பதை மேலே நான் சொல்லிக் காட்டிய ஹதீஸ்களிலிருந்து புரிந்து கொள்ள வேண்டும்.

இதே கருத்தை அதிகமான இமாம்கள் தமது நூல்களில் குறிப்பிட்டிருக்கின்றார்கள். அத்துடன் ஒரு முஸ்லிமைக் "காபிர்" என்று சொல்லும் விடயத்தில் மிக எச்சரிக்கையாக நடந்து கொள்ள வேண்டும் எனவும் கூறியிருக்கின்றார்கள். ஒரு மனிதனுடைய பேச்சை அல்லது எழுத்தை தெளிவாகப் புரிந்து கொண்டு அவரிடத்தில் அதற்கான விளக்கங்களை கேட்டறிந்து கொண்டு அல்குர்ஆன், அல்ஹதீஸ், இஜ்மா.., கியாஸ் அடிப்படையில் தீர்ப்புச் செய்ய வேண்டும் என கூறியிருக்கின்றார்கள்.

இன்று சிலர் ஒரு மனிதனுடைய பேச்சை அறைகுறையாகக் கேட்டுவிட்டு, முழுமையாகக் கேட்காமல் அவசரப்பட்டு அந்த மனிதனை காபிர் என்று அல்லது முஷ்ரிக் என்று அல்லது முர்தத் என்று கூறுகின்றார்கள். இது தவறான நடைமுறை. பெரிய பாவத்தை நமக்கு ஏற்படுத்தக் கூடியது. இதிலிருந்து நாம் யாராக இருந்தாலும் சரி உலமாக்களாக இருந்தாலும் சரி பொதுமக்களாக இருந்தாலும் சரி தவிர்ந்து கொள்ள வேண்டும்.

அதிசங்கைக்குரிய ஷெய்குனா ஷம்சுல் உலமா, நஜ்முல் உறபா, கமருல் புகஹா மௌலவீ அல்ஹாஜ் A. அப்துர் றஊப் மிஸ்பாஹீ (அதாலல்லாஹு பகாஅஹு) அவர்களும் அவர்களுடைய முரீதீன்களான நாங்களும் பேசிவருகின்ற "வஹ்ததுல் வுஜூத்" உள்ளமை ஒன்று என்ற இஸ்லாமிய ஸூபிஸ தத்துவத்தை, அல்குர்ஆன் கூறுகின்ற தத்துவத்தை, நபீ

(ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறிய தத்துவத்தை, இமாம்கள், ஸூபியாக்கள், தரீக்காக்களின் ஷெய்குமார்கள் கூறிய தத்துவத்தை சரியாகப் புரிந்து கொள்ளாத சிலர் அல்லது இந்த தத்துவமே அறவே தெரியாத சிலர் எங்களைக் காபிர்கள், முஷ்ரிக்குகள் என்று சொல்லித் திரிகின்றனர். இவர்கள் சொல்லக் கூடிய சொல் இவர்களையே சென்று சேருகின்றது. வானத்தைப் பார்த்துத் துப்புவதுபோல இவர்களின் சொல் இவர்களின் முகத்திலேயே போய் விழுகின்றது.

சங்கைக்குரிய உலமாக்களே! அல்லாஹ்வின் நல்லடியார்களே! அன்புச் சகோதரர்களே! அல்லாஹ்மீது சத்தியமாகச் சொல்கின்றோம் நபீ (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களையும், வலீமார்களையும், ஷெய்குமார்களையும் முன்னிருத்திச் சொல்கிறோம்.

- அல்லாஹ் ஒருவன். அவன் தனித்தவன்.
- இணை துணை இல்லாத தூயவன்.
- தன்னைக் கொண்டே நிலை பெற்றவன். அவனை யாரும் படைக்கவில்லை. எல்லாவற்றையும் அவனே படைத்தான். எல்லாம் அவனளவிலேயே தேவையாகின்றன. சகல சிருஷ்டிகளும் அவனைக் கொண்டே ஆகி இருக்கின்றன. அவன் தன்னைக் கொண்டு நிலை பெற்றுள்ளான். ஆரம்பம் முடிவு அவனுக்கில்லை. சிருஷ்டிகளுக்கு மாற்றமானவன். அவனைப் போல் எதுவுமில்லை. அவனே கேட்பவனாகவும் பார்ப்பவனாகவும் இருக்கின்றான். அவன் جوهـــــــر உம் அல்ல عـــــــرض உம் அல்ல. ஆதாரமும் அல்ல ஆதேயமும் அல்ல. இடம், சடம், காலம், திசை என்பனவைகளை விட்டும் பரிசுத்தமானவன் தூயவன்.

அவன் எப்படி இருந்தானோ அப்படியே இருக்கின்றான். அவனின்றி ஒரு அணுவும் அசையாது. எல்லாம் அவனது நாட்டப்படியே நடக்கின்றது. அவனே முந்தியவன், அவனே பிந்தியவன், அவனே வெளியானவன், அவனே உள்ளானவன், உள்ளத்தில் ஏற்படும் எண்ணங்கள் அனைத்திற்கும் அவன் மாற்றமானவன் என நாம் ஈமான் கொண்டுள்ளோம்.

நாங்கள் பரிசுத்த மு.்.மின்கள். லா இலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் றஸூலுல்லாஹ் என ஈமான் கொண்டுள்ளோம். அல்லாஹ் தஆலாவின் ஏவல்களை எடுத்து அவனது விலக்கல்களைத் தவிர்ந்து நடக்கின்றோம். தொழுகின்றோம், நோன்பு நோற்கின்றோம், ஸகாத் கொடுக்கின்றோம், ஹஜ்



செய்கின்றோம். அல்லாஹ்வின் வேதமான அல்குர்ஆனையும் நபீ (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் ஸுன்னத்தையும் ஏற்று நடக்கின்றோம்.

خلفاء الراشدينகளை கண்ணியப்படுத்தி அவர்களின் சொற்படி நடக்கின்றோம். ஏனைய ஸஹாபாக்கள் அனைவரையும் கண்ணியப்படுத்துகின்றோம். ஷாபிஈ மத்ஹபையும், இமாம் ஷாபிஈ (றஹ்மதுல்லாஹி அலைஹி) அவர்களையும் பின்பற்றுகின்றோம். காதிரிய்யஹ் தரீக்காவையும் குத்புல் அக்தாப் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானீ (றஹிமஹுல்லாஹ்) அவர்களையும் பின்பற்றுகின்றோம். ஏனைய தரீக்காக்களையும் மஷாயிஹ்மார்களையும் மதிக்கின்றோம். இஸ்லாமிய அகீதாவில் இமாம் அபுல் ஹஸன் அல்அஷ்அரீ (றஹ்மதுல்லாஹி அலைஹி) அவர்களைப் பின்பற்றுகின்றோம்.

ஸூபிஸ நடைமுறைகளில் இறைஞானிகளான ஸூபியாக்களைப் பின்பற்றுகின்றோம். அஷ்ஷெய்குல் அக்பர் வல்மிஸ்குல் அத்பர் முஹ்யித்தீன் இப்னு அறபீ (றழியல்லாஹு அன்ஹு) அவர்கள் போதித்த அடிப்படையில் வஹ்ததுல் வுஜூத் - உள்ளமை ஒன்று, உள்ளமை என்பது அல்லாஹ். அல்லாஹ் ஒருவன். அவனது உள்ளமை மாத்திரமே இருக்கின்றது. படைப்புகள் சுயமான உள்ளமை அற்றவை. அல்லாஹ்வின் உள்ளமையைக் கொண்டே அவை இருக்கின்றன. உண்மையில் படைப்புகள் என்பது இல்லை அல்லாஹ் மாத்திரமே இருக்கின்றான். படைப்புகளாகத் தெரிவது படைப்புகள் அல்ல அல்லாஹ்வின் உள்ளமைதான் படைப்புகளாக நமக்குத் தெரிகின்றது.

அல்லாஹ் யதார்த்தமான உள்ளமையானவன் என்பதுபோல் படைப்புகளும் யதார்த்தமான உள்ளமையானவை என நம்புதல் இணையாகும் என்றும் எல்லாம் அவனே அவன் மாத்திரமே இருக்கின்றான். அவனைத் தவிர ஒன்றுமில்லை. எல்லாம் என நமக்குத் தோற்றுவது மாயை. உள்ளமையில் அவன் மட்டும் இருக்கின்றான். இதனால் அவனுக்கு இணையில்லை என்று போதிக்கின்றோம்.

இந்த கருத்துக்களை நாம் எமது சொந்த இஷ்டப்படி சொல்லவில்லை. அல்குர்ஆனையும் ஹதீஸையும் ஆதாரமாகக் கொண்டு ஸூபியாக்களும் ஷெய்குமார்களும் தமது நூல்களில் கூறிய கருத்துக்களின் அடிப்படையிலேயே நாம் வஹ்ததுல் வுஜூத் போதிக்கின்றோம்.

படைப்புகளில் அல்லாஹ் தஆலா இறங்கியிருக்கின்றான் என்பதை வலியுறுத்தும் ''ஹுலூல்'' கொள்கையையும், படைப்புகளுடன் அல்லாஹ் இரண்டறக் கலந்துவிட்டான் என்பதை வலியுறுத்தும் ''இத்திஹாத்'' கொள்கையையும் நாம் தெளிவாக மறுக்கின்றோம்.

அல்குர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் நான்கு மத்ஹபுகளின் இமாம்களின் கருத்துகளுக்கும் ஸூபியாக்களினதும் தரீக்காக்களை ஆரம்பித்த ஷெய்குமார்களினதும் கருத்துக்களுக்கும் மாற்றமான சகல கொள்கைகளையும் நாம் மறுக்கின்றோம்.

எல்லாம் வல்ல அல்லாஹ் எங்களின் நிலைகளையும் எங்களின் உள்ளத்திலுள்ளவைகளையும் நன்கு அறிந்தவனாக இருக்கின்றான்.

நமது நிலைப்பாட்டை நாம் பல தடவைகள் வெளியிட்டுள்ளோம். இவ்வளவு தெளிவாக பகிரங்கமாக எங்களின் நிலைப்பாட்டை நாங்கள் தெளிவுபடுத்திய பின்னரும் யாராவது எங்களைக் காபிர் என்றோ முஷ்ரிக் என்றோ முர்தத் என்றோ ஷிர்க் எனும் சகதியை முகத்தில் பூசிக் கொண்டு இருக்கின்றார்கள் என்றோ கூறினால் அவர்களின் முடிவை அல்லாஹ்விடம் நாம் பாரம் கொடுக்கின்றோம்.

**சங்கைக்குரிய உலமாஉகளே!**

இன்று ஸுன்னத் வல் ஜமாஅத் உலமாக்களில் சிலர் வஹ்ததுல் வுஜூத் என்று ஒரு விடயம் இஸ்லாத்தில் உண்டு. அதை பலர் பேசி வருகின்றார்கள். எங்களால் அதை விளங்கிக் கொள்ள முடியவில்லை என்று கூறுகின்றார்கள்.

அந்த நிலையில் நீங்கள் இருந்தால் வஹ்ததுல் வுஜூதை சரியான முறையில் கற்றுக் கொள்ளுங்கள். இதுதான் ஈமானின் அடிப்படை. உங்களது''இல்மை'' பெரிதாகக் கருதி இந்த ம.ஃரிபாவைத் தவறவிட்டு விடாதீர்கள்.

இன்னும் சில ஸுன்னத் வல் ஜமாஅத் உலமாக்கள் தாம் வஹ்ததுல் வுஜூத் கொள்கையை நம்பியிருப்பதாகவும் ஷெய்குனா அப்துர் றஊப் மிஸ்பாஹீ அவர்கள் கூறிவரும் வஹ்ததுல் வுஜூத் கொள்கையைத் தாம் மறுப்பதாகவும் அது குப்ர் என்பதாகவும் தங்களின் துன்யாவுடைய



நன்மைகள் இல்லாமல் ஆகிவிடும் என்பதற்காகவும் தங்களையும் முர்தத்துகள் என்று சொல்லிவிடுவார்கள் என்பதற்காகவும் கூறிவருகின்றனர்.

அப்படியானவர்களாக நீங்கள் இருந்தால் அல்லாஹ்வைப் பயந்து கொள்ளுங்கள். நீங்கள் நம்பியிருக்கும் வஹ்ததுல் வுஜூத் கொள்கை என்ன என்பதையும் ஷெய்குனா மிஸ்பாஹீ அவர்களும் நாங்களும் கூறிவரும் வஹ்ததுல் வுஜூத் கொள்கை எந்த அடிப்படையில் அல்குர்ஆனுக்கும் ஹதீதுக்கும் இமாம்கள் அவ்லியாக்கள் ஸூபியாக்களின் கருத்துக்களுக்கும் மாற்றமாக அமைந்துள்ளது என்பதை ஒரு பத்வாவின் மூலம் தெளிவுபடுத்தி தீர்ப்புச் செய்யுங்கள். 1979ம் ஆண்டு அகில இலங்கை ஜம்இய்யதுல் உலமா வழங்கிய உதவாத பத்வாவைத் தலையில் சுமந்து திரிவதை நிறுத்திவிட்டு ஸுன்னத் வல் ஜமாஅத் உலமாக்கள் ஒன்று சேர்ந்து அல்குர்ஆன், அல்ஹதீஸ், அல்இஜ்மா.ஃ, அல்கியாஸ், اقوال الصوفية என்பவற்றைக் ஆதாரமாகக் கொண்டு தெளிவான தீர்ப்பை முன்வையுங்கள். சமூக வலையத்தளங்களில் தெளிவற்ற முறையில் வாயால் தீர்ப்புச் சொல்வதும் எழுத்துகளால் தீர்ப்புச் சொல்வதும் கற்றறிந்த உலமாக்களுக்கு அழகல்ல. அல்லாஹ் யாவற்றையும் நன்கறிந்தவன்.

அல்ஹம்துலில்லாஹ்!